28th January 1961]

THE HON. SRI P. KAKKAN : The estimate for the scheme has been received from the Chief Engineer (Irrigation). The report of the Collector of Madurai and the Board's remarks thereon have now been received and they are under examination.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—STATEMENT BY THE HON. MINISTER FOR HOME.

MR. SPEAKER : The Hon. Minister for Home will now make a statement under Rule 82 of the Assembly Rules.

(Sri M. Kalyanasundaram rose.)

The hon. Member cannot make any speech. He can just put a question and if the Hon. Minister is prepared to reply, I have no objection.

SRI M. KALYANASUNDARAM : நம்முடைய ராஜ்யத்திற்கு தமிழ்நாடு என்று பெயர் இடவேண்டும் என்கிற கோரிக்கையை முன்னிட்டு இந்தச் சட்டசபையில் பல கட்சியினர் வற்புறுத்தி வந்திருந்தபோதிலும் அது என்ன முடிவு செய்யப்பட இருக்கிறது, எந்த நிலையில் இருக்கிறது என்பது எங்களுக்குத் தெரியாது. அப்படி இருக்கும்போது தமிழரசுக் கழகத்தினர் சட்டசபை முன்பும், சர்க்கார் காரியாலயத்தின் முன்பும் மறியல் செய்வது என்று முடிவு செய்திருப்பதாகவும், தமிழரசுக் கழகத் தலைவர் முதல் மந்திரி அவர்களையும், உள்நாட்டு மந்திரி அவர்களையும் சந்தித்துப் பேசியிருப்பதாகவும் பத்திரிகையில் நாம் பார்க்கிறோம். இந்தச் சபை நடந்துகொண்டிருக்கிறபோது இது பற்றிய விஷயம் இந்தச் சபைக்கும் அறிவிக்கப்படவேண்டும் என்று நான் கருதுகிறேன். அரசாங்கம் இது சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள்? எடுக்கப் போகிறார்கள்? இச்சபையில் உள்ள அநேகருடைய கருத்தும் தமிழ்நாடு என்று பெயரிடவேண்டும் என்று இருப்பதால் அரசாங்கத்தினுடைய கருத்து அதுபற்றி என்ன? இவற்றையெல்லாம் இச்சபைக்குத் தெரிவிக்கும் உத்தேசம் உண்டா என்பதை எல்லாம் தெளிவுபடுத்தவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் சபாநாயகர் அவர்களே, நான்-அபீஷியல் டே வர இருக்கிறது அன்று இதுபற்றிய தீர்மானம் வருகிறது. கனம் நிதி அமைச்சர் அவர்கள் அப்போது எல்லாவற்றையும் தெளிவாக விளக்குவார்கள் என்று தெரிவித்துக்கொள்கிறேன். ஏதோ கிளர்ச்சி பற்றி சொன்னார்கள். ஆனால் கிளர்ச்சி என்றால் எனக்குக் கிடைத்த தகவல்படி டெமான்ஸ்ட்ரேஷன் நடத்துவதாகத்தான் கண்டிருக்கிறது. பலாத்காரச் செயல்களில் ஈடுபடப்போவதாக ஒன்றும் இல்லை. அதுதான் நிலைமை.

[28th January 1961

SRI S. M. ANNAMALAI : Sir, on a point of information, Sir.

MR. SPEAKER : There can be no point of information on this after the Hon. Minister has made the statement. Rule 82 is quite clear. It says—

" A statement may be made by a Minister (whether it is satisfactory or not, is not my concern) on a matter of public importance with the consent of the Speaker but no question shall be asked at the time the statement is made."

So, I am sorry I cannot allow the hon. Member to raise any point of information.

### III.—CALLING ATTENTION TO THE BAD CONDITION OF ROADS IN TIRUCHENDUR TALUK.

MR. SPEAKER : I have received notice under Rule 41 from the hon. Member Sri M. S. Selvarajan calling the attention of the Hon. Minister for Local Administration to a matter of urgent public importance, viz., the bad condition of roads laid by the District Board and roads formed under Local Development works scheme in Tiruchendur taluk of Tirunelveli district.

SRI N. K. PALANISAMI : சென்னைக்கு தமிழ்நாடு என்று பெயர். . . . .

MR. SPEAKER : இதைப்பற்றி 30-ம் தேதி தீர்மானம் வரும் போது நீங்கள் பேசுங்கள்.

(Sri S. M. Annamalai rose)

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் ஸ்ரீ பழனிசாமிக்கே அனுமதி கொடுக்கவில்லையே. உங்களுக்கு மாத்திரம் எப்படி அனுமதி கொடுப்பது? இதைப்பற்றிய தீர்மானம் வரும்போது பேசுங்கள்.

* SRI M. S. SELVARAJAN: திருநெல்வேலி ஜில்லாவில் திருச்செந்தூர் தாலூகா மிகவும் முக்கியமானது. மணற்பாங்கான பகுதி, நீண்ட கடல் ஓரம் கொண்டது. பல வருஷங்களாக பஞ்ச நிவாரண வேலையாக பல ரஸ்தாக்கள் போடப்பட்டன. அவைகள் இப்பொழுது மிகவும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. அவைகள் ஸ்திரமற்றதாகவும் பலமற்றதாகவும் இருக்கின்றன. பல வருட காலமாகச் சேகரித்து வைத்த கற்களை விரிக்க முடியாத காட்சி அங்கு இருக்கிறது. கடல் ஓரமாக உள்ள தாலுக்காவாதலால், வெள்ளம் காரணமாகவும், மழை காரணமாகவும் கோடையிலும், ஆடையிலும் நல்ல ரஸ்தாக்கள் இல்லாத காரணத்தினால் மக்கள் கஷ்டப்படுகின்ற நிலைமை மிகவும் பயங்கரமாக இருக்கிறது. ஜில்லா முழுமையில் இரு நூற்று முப்பது மைல் ஜில்லா போர்டு ரோட்டில் திருச்செந்தூர் தாலூகாவில் மாத்திரம் 130 மைல் ரோடில் பஸ் ஓடுகிறது.